# திருக்குறள்

**கள்ளாமை:**

- எள்ளாமை வேண்டுவா னென்பான் எனைத்தொன்றுங்
  கள்ளாமை காக்கதன் நெஞ்சு.
- உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
  கள்ளத்தால் கள்வேம் எனல்.
- களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்
  தாவது போலக் கெடும்.
- களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
  வீயா விழுமந் தரும்.
- அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
  களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

**வாய்மை:**

- வாய்மை எனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
  தீமை இலாத சொலல்.
- தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
  தன்னெஞ்சே தன்னைச் சுடும்.
- புறந்தூய்மை நீரா னமையும் அகந்தூய்மை
  வாய்மையாற் காணப் படும்.
- எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
  பொய்யா விளக்கே விளக்கு.

**வெகுளாமை:**

- செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
  இல்லதனின் தீய பிற.
- மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
  பிறத்தல் அதனான் வரும்.
- தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்
  தன்னையே கொல்லுஞ் சினம்.
- சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
  நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.
- உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்
  உள்ளான் வெகுளி யெனின்.

**இன்னா செய்யாமை:**

- சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
  செய்யாமை மாசற்றார் கோள்.
- செய்யாமற் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
  உய்யா விழுமந் தரும்.
- இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
  நன்னயஞ் செய்து விடல்.
- பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் தமக்கின்னா
  பிற்பகற் றாமே வரும்.

**கொல்லாமை:**

- அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
  பிறவினை எல்லாந் தரும்.
- நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
  கொல்லாமை சூழும் நெறி.
- தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறிது
  இன்னுயிர் நீக்கும் வினை.

**நிலையாமை:**

- கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
  போக்கும் அதுவிளிந் தற்று.
- நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
  பெருமை உடைத்திவ் வுலகு.
- உறங்குவது போலுஞ் சாக்காடு உறங்கி
  விழிப்பது போலும் பிறப்பு.

**துறவு:**

- அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
  வேண்டிய எல்லா மொருங்கு.
- யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்கு
  உயர்ந்த உலகம் புகும்.
- பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
  நிலையாமை காணப் படும்.
- பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
  பற்றுக பற்று விடற்கு.

**மெய்யுணர்தல்:**

- எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
  மெய்ப்பொருள் காண்ப தறிவு.
- பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
  செம்பொருள் காண்ப தறிவு.
- காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
  நாமங் கெடக்கெடும் நோய்.

**அவாவறுத்தல்:**

- அவாவென்ப எல்லா உயிர்க்குமெஞ் ஞான்றுந்
  தவாஅப் பிறப்பீனும் வித்து.
- அற்றவ ரென்பார் அவாவற்றார் மற்றையார்
  அற்றாக அற்ற திலர்.
- அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
  வஞ்சிப்ப தோரும் அவா.

**ஊழ்:**

- நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
  உண்மை யறிவே மிகும்.
- வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
  தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.
- ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
  சூழினுந் தான்முந் துறும்.